றியது. எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். வைதீகர்கள் சாம்பசிவய்யரை வாழ்த்திச் சென்றார்கள். ஊரிலுள்ளோரெல்லாம் இன்னம் சில நாளைக்கு அடுப்பு எக்கேடு கெட்டாலென்ன வென்றிருந்தார்கள். இராமசாஸ்திரிகள் மிகவும் சந்தோஷமடைந்தார். அவருக்குத் தக்ஷிணை யதிகமாய் கிடைத்தது. சாப்பாடும் முதல்கட்டு சாப்பாடுதான். அவர் மிகவும் திருப்தியடைந்தார். அவரைப்போல் தம்பதிகளை மனமார வாழ்த்தினவர் வைதீகர்களில் ஒருவரும் இல்லையென்னலாம்.

மீனாக்ஷி இந்த சம்பந்தத்தைக் கண்டு மிகவும் சந்தோஷங்கொண்டாள். இரண்டாம் நாள் ஞானம்பாளிடம், "எப்படியோ உன் எண்ணத்தை நீ சாதித்துவிட்டாய். உன்னிஷ்டப்படியே அவனைக் கலியாணம் செய்துகொண்டாய். இனி என்னுடன் அதிகமாய்ப் பேசுவாயா? உன்னுடன் பேச ஒருவர் வந்து விட்டார் அல்லவா! என்னை மறக்காதே." என்று கேலி செய்தாள்.

சாம்பசிவய்யர் மனைவி நல்ல மாப்பிள்ளை தனக்குக் கிடைத்ததைப் பற்றி அகமகிழ்ந்தாள். சாம்பசிவய்யர் கோபாலனின் குணங்களையும் அறிவையும் பேசுந்திறமையையுங் கண்டு தேகம் பூரித்தார். சுந்தரமய்யரும் அவர் மனைவியும் ஞானம்பாளின் குணத்தையும் அழகையும் கண்டு மனமகிழ்ந்தார்கள். ஊரிலுள்ளோரெல்லாம் இந்த சம்பந்தத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்கள். எல்லாம் மங்களமாக நான்குநாளும் கலியாணம் நடந்தேறிற்று.

கோபாலனுக்கும் ஞானம்பாளுக்கும் உண்டான ஆனந்தத்தை யளவிட நம்மால் முடியாது. அவ்வளவு சந்தோஷங்கொண்டார்கள். ஆம், சந்தோஷந்தான். முன்பின் அறியாத இவர்கள் ஏதோ ஒரு தற்செயலான சம்பவத்தால் ஒருவரை ஒருவர் அறிந்துகொண்டார்கள். பெருங்காடுபோன்ற இவ்வுலகத்தில் உள்ள அநேகம் பாதையில் இரண்டில் இவர்கள் நடந்துபோய்க் கொண்டிருந்த திடீரென இருவரும் சந்தித்து அச்சந்திப்பால் காதலுண்டாகி அதனால் அவர்களுக்கு விவாகமுண்டாய் இருவரும் ஒருகாலும் பிரியக்கூடாத கட்டுப்பாட்டிற்குள்ளாய் அவ்வுலகமாகிய ஆரண்யத்தில் தமக்கென்று ஒரு வழி ஏற்படுத்திக்கொண்டு ஒருவரை யொருவர் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு அவ்வழியில் சென்றுகொண்டிருக்கிறார்கள். முன்பின் அறியாதவர்களை யறியச்செய்து அவ்வறிவால் அன்புண்டாக்கி விருத்திசெய்து அதை நல்வழியில் நடத்தும் காலபுருஷனுடைய மகிமையை என்னென்று விவரிப்பது!